சிவமயம்.

# தனிப்பாடற்றிரட்டுரை முதற்பாகம்.

காளமேகப்புலவர் முதலிய
தமிழ்ப்புலவர்கள் அவ்வவ்வமயங்களில் பாடிய
தனிப்பாடல் மூலமும்,
அவைகளுக்கு
வித்யாவிநோதினி பத்திராதிபர்களால்
எழுதுவித்த வுரையும்
ஷை பத்ராதிபர்களால்

சென்னை:
அமெரிக்கன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.
1894.

விலை ரூ. 1—8—0

# NOTICE.

**Apply to.**

T. SUMMANTHA MUDELLIAR

**Porprietor of.**

" VIDHYA VINODHINI "

**Cash-Keeper, Madras Railway Coy. Rayapuram**

**16,** ***Meenjur Appavu Mudelliar Street,***

***Peddu Naick's Pettah, Madras.***

அமரர் ஸ்ரீ. அருணாசல முதலியார்
அவர்களின் ஞாபகார்த்த அன்பளிப்பு.
அளித்தவர்:
திருமதி A. சியாமளா அருணாசலம்
ஸ்ரீ க்ஷேத்ர சீர்காழி.



---

வித்யாவினோதினி பத்திரிகை வாயிலாக முற்காலத்துப் புலவர்களாகிய காளமேகப்புலவர் முதலியோரால் அவ்வவ்வமயங்களில் பாடப்பட்ட தனிப்பாடல்களுக்கு உரையெழுதி, தெரிந்தவரையில் சந்தர்ப்பங்களுங் குறித்து, சஞ்சிகை ரூபமாக இதுவரையில் வெளிப்படுத்திவந்த தனிப்பாடற்றிரட்டை முதற்பாகமாக வெளிப்படுத்திக்கட்டடஞ் செய்திருக்கின்றோம்.

இம்முதற்பாகத்தி லடங்கிய பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயரும் பாடல்களின் தொகையும் வருமாறு:—

இனி வெளிப்படுத்தப்படும் இரண்டாம் பாகத்தில் மேற்குறித்த புலவர்களின் சரித்திரமும், பேர்விளங்காத பல புலவர்களால் பாடப்பட்ட தனிப்பாடல்களுக்குரையும் எழுதிப் பிரசுரிக்கப்படும்.

இங்ஙனம்,

தி. ச.

## வித்தியாவிநோதினி ஆபீசில் விற்கப்படும் புத்தகங்கள்.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| சிலப்பதிகாரமூலமும் அடியார்க்கு நல்லாருரையும். ... | 5 | 8 | 0 |
| பத்துப்பாட்டு நச்சினார்க்கினியாருரை ... ... | 3 | 0 | 0 |
| சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியாருரை ... ... | 6 | 0 | 0 |
| தாயுமானசுவாமிகள் பாடலுரை ... ... ... | 3 | 4 | 0 |
| பட்டணத்துப்பிள்ளையார் பாடலுரை. ... ... | 1 | 12 | 0 |
| தஞ்சைவாணன்கோவை ... ... ... | 1 | 4 | 0 |
| பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டப்பிரபந்தவுரை ... | 1 | 4 | 0 |
| ௸ ௸ கிளேஸ்காகிதம் ... ... | 1 | 8 | 0 |
| கந்தரலங்காரவுரை ... ... ... ... | 0 | 3 | 0 |
| கயிலைபாதி காளத்திபாதி திருவந்தாதியுரை .. ... | 0 | 3 | 0 |
| திருக்கருவைக் கலித்துறையந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| திருக்கருவை வெண்பாவந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| மாமிமருகியார்வாழ்க்கை (வசனம்) ... ... ... | 0 | 4 | 0 |
| சுக்ரீவபயநிக்ரகம் ௸ ... ... ... | 0 | 8 | 0 |
| மங்களவல்லிவிலாசம் ... ... ... ... | 0 | 9 | 0 |

இரண்டாம் பாகத்திற் சேரவேண்டியது இங்குத் தவறாய் விழுந்துவிட்டது.

உ

கணபதிதுணை.

# தனிப்பாடற்றிரட்டு

மூலமும் உரையும்.

ஸ்ரீ அகிலாண்டநாயகியார் வரப்பிரசாதியாகிய

## காளமேகப்புலவர்

அவ்வவ்வமயங்களிற்பாடியவை.

### காப்பு.

ஏரானைக்காவிலுறையென்னானைக்கன்றளித்த
போரானைக்கன்றுதனைப்போற்றினால் - வாராத
புத்திவரும்பத்திவரும்புத்திரவுற்பத்திவரும்
சத்திவருஞ்சித்திவருந்தான்.

இ - ள். ஏர் - அழகுபொருந்திய, ஆனைக்காவில் உறை-திருவானைக்காவில் வசிக்கின்ற, ஆனைக்கு அன்று அளித்த-யானைக்கு அந்நாளில் முத்தி கொடுத்தருளின, போர்-போர்த்தொழிலில்வல்ல, என் ஆனைக்கன்றுதனை-என்யானையாகிய சிவபெருமானது புதல்வனாகியவிநாயகக்கடவுளை, போற்றினால் - முக்கரணங்களாலும் வழிபட்டால், வாராத - உண்டாதற்கரிய, புத்திவரும் - நல்லறிவுண்டாகும், பத்திவரும் - (அவ்வறிவின்பயனாகிய) ஈசுவரபக்தியுண்டாகும், புத்திர உற்பத்திவரும்-நன்மக்கட்பேறுண்டாகும், சத்திவரும் - (நினைந்த கருமங்களை முடிக்கவல்ல) பேராற்றலுண்டாகும், சித்திவரும் - (எல்லாக்காரிய) சித்தியுமுண்டாகும், எ - று.

தான்-அசை. யானைக்கு முத்திகொடுத்தது திருவானைக்காவில். இதனை அத்தலபுராணத்தில் விரிவாய்க்காணலாம். சிவபெருமானை யானையென்றதற்கும் விநாயகமூர்த்தி யானைமுகத்தோடு அவதரித்ததற்கும் உதாரணம் அடியில் வருவது. "அரம்பையர் வாழ்த்த வமளியிற் றுயில்கொண், டெரம்பயில் கதிரோ னுதயஞ் செய்தபின், விண்ணோர்க் கெல்லாம் விடை கொடுத் தருளிப், பண்ணேர் மொழிமடப் பாவையை நோக்கி, ஓதீர் வேலி

குருஞ்சையம் பதியைப், போதுக வென்று போகிய வந்நாள், இளமதி யணிசடை யெந்தை தன்னரு ளால், வளமுடன் வழியின் மலைச்சாரலி லேகா, களிறும் பிடியுங் கலந்தது கண்டு, ஒளிமதிச் சடையோ னுமைமுக நோக்கி, நூல்வழி பணிமத் தேர்ந்திசை தன்னைப், பாராதேவா பனிமொழி யாயென, வாரா முலையாள் மற்றுமுண் டோவென, மெல்லியலுமையவள் விரும்பினள் பார்த்தே, அல்லிசேர் குழலா ளரன்முகம் பார்த்தாள். இவ்வகையாக வேண்டு மிங்கென, அவ்வகையாலு மதற்குடம் பட்டு, மதகரி யுரித்தோன் மதகளிறாகவும், மாதுமை பிடி வடிவமாகவும், கூடிய கலவியிற் குவலயம் விளங்க, நீடிய மன்றுள் நெற்றிலே போற்றத், தங்குவெண் பிறையுந் தந்தம் முறைதழைப்பத், தொங்கமும் பரிய கஞ்சு பெருக, முண்டக மலர்போன் முழுதுரு விளங்க, தண்டையார் சலங்கையு மலர்ப்புதாளிணையும், குண்டவண் டியுந் தண்டரோ மாலையும், மணமொளிதழைத்த புண்டர நுதலும், முடிவு கலந்தறியா முப்புரி நூலும், சுடர்விடு கனகத் தோளொரு நான்கும், கோதி லண்டரளத் தொடைபணி கழுத்தும், பூதலம் புரக்கும் பொற்கரிமுகமும், தவளக்கொடிபுரி தருமொப்பில் செவியும், பவளத்தொளிவாய் பைந்துவரிதழும், இமையா முக்கணு மிருந்தன்மைத் திங்களும், அமையாநிலவுமிழ் மாசடைமுடியும், அந்தியொண்ணமு மங்குசபாசமும், உந்திச்சுழி மேலுதரபந்தமுடன், ஐங்கரக்கரிமுகன் வந்தவதரித்தலும், பொங்கரவணிந்தோன் புதல்வனை நோக்கி, வானோர் மன்னோர் வந்துவழிபட, ஆனோர் வல்வினை யாசறவகற்றித், தண்டுள வோனையன் சதயகன முதலோர்க், கின்றுமுதலிறையா யிருந்தி யென்றருளித், தெய்வநாயகியார் திருவுளமுடைமையுடன், மைவளர்சோலை மாநகரம்புகுந்து, தலையாக் கூட்டந் தமர்ந்தக்காலம், இமையா முக்கண்ணுறை யிருந்தருளினன்" இது அகத்திய முனிவர் அருளிச்செய்தது. மேலும் ஆனை ஐ என்று வணங்கித்தந்த பொருளை இடபத்துக்குத் தலைவராகிய சிவபெருமானுக்குப் புதல்வன் என்று வைப்பினுமமையும். இவ்வாறன்றி, ஆனைக் கன்றன்றி ஆனைக்கன்றாகவே, என்பது ஆனைக்கன்றாகிய சிவபெருமான் ஈன்ற ஆனைக்கன்றாகிய விநாயகக்கடவுளா" என்றுரைப்பினுமாம். விநாயகக்கடவுளின் அவதாரத்தைப்பற்றி இன்னும் வேறுவகையாகிய கதைகளுமுண்டு.

**திருமலைராயன் சபையில் இவர் போனபோது**
**அந்தச்சமஸ்தான வித்வான்கள் இவர்க்கு இடங்கொடாமலிருந்ததனால்**
**நாயகனைத் தியானித்து இந்த வெண்பாவைப்பாட**
**உடனே அரசனது சிங்காதனம் ஒருமுழம் வளர்ந்து இடங்கொடுத்தது.**

1. வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப்பணிபூண்டு
வெள்ளைக்கமலத்தே வீற்றிருப்பாள் - வெள்ளை
அரியாசனத்தில் அரசரோ டென்னைச்
சரியாசனம்வைத்த தாய்.

### வைக்கோலுக்கும் - யானைக்கும்.

3. வாரிக்களத்தடிக்கும்வந்துபின்புகோட்டைபுகும்
போரிற்சிறந்துபொலிவாகும் - சீருற்ற
செக்கோலமேனித்திருமலைராயன்வரையில்
வைக்கோலுமால்யானையாம்.

இ - ள். சீர் உற்ற-சிறப்புமிகுந்த, செம்மைகோலம்மேனி-செம்மை யாகிய அழகிய திருமேனியையுடைய, திருமலைராயன்வரையில் - திருமலை ராயனது மலையின்கண், வைக்கோலும் மால்யானை ஆம் - வைக்கோலும் மால்யானையை நிகர்க்கும்,

செங்கோலம்-செக்கோலம் என வலித்தல்பெற்றது.

வைக்கோல்.

வாரிக்களத்து அடிக்கும் - (உழவர்களால்) வருவியெடுத்து நெற்களத் தில் அடிக்கப்படும், பின்புவந்து கோட்டைபுகும் - பிறகு அங்கு நின்றுவ கொண்டுவந்து கோட்டையாகக் கட்டிச் சேர்க்கப்படும், போரில்சிறந்து பொலிவு ஆகும்-போர்களாகி மேம்பட்டுப் பொலிவையடையும்.

யானை.

களத்துவாரிஅடிக்கும்-போர்க்களத்தில்(பகைவரை)வாரிநிலத்திலறை யும்,பின்புவந்துகோட்டைபுகும்-(பகைவரைமுடித்த)பிறகுவந்துகோட்டை யில்பிரவேசிக்கும், போரில்சிறந்து பொலிவு ஆகும்-போரில் (வெற்றி) மிகு ந்து விளங்கும், எ-று.

### பாம்புக்கும் - வாழைப்பழத்துக்கும்.

4. நஞ்சிருக்குந்தோலுரிக்குநாதர்முடிமேலிருக்கும்
வெஞ்சினத்திற்பற்பட்டான்மீளாது - விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்பாகும்வாழைப்பழம்.

இ - ள். விஞ்சும் மலர் தேம் பாயும் சோலை - மிகுதியாகிய பூந்தேன் பெருகிப்பாய்கின்ற சோலைகள்சூழ்ந்த, திருமலைராயன்வரையில - திருமலை ராயனது வெற்பின்கண், பாம்பு வாழைப்பழம் ஆகும் - பாம்பானது வா ழைப்பழத்தை நிகர்க்கும்.

பாம்பு.

நஞ்சு இருக்கும் - விஷத்தையுடைத்தாயிருக்கும், தோல் உரிக்கும் - (பருவமறிந்து) சட்டையைக்கழற்றும், நாதர்முடிமேல் இருக்கும் - இறை

வரது திருமுடிமீதிருக்கும், வெம்சினத்தில் பல்பட்டால் மீளாது-கொடிய கோபத்தில் கடித்த அதன்பல்லானது பதிந்தால் விஷமிறங்காது.

மீளாதுஎன்பதற்கு இறந்தவுயிர்திரும்பாது என்றலுமொன்று.

வாழைப்பழம்.

நஞ்சு இருக்கும் - நைந்திருக்கும், தோல் உரிக்கும்-தோலுரிக்கப்படும், நாதர்முடிமேல் இருக்கும் - இறைவரது திருமுடிமீது அபிஷேகதிரவியமாகச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும், வெஞ்சினத்தில் பல்பட்டால் மீளாது - பதார்த்தமாகுங் காலத்தில் பல் பட்டால்திரும்பாது, எ - று.

வெஞ்சினம் - உண்டிமீறிடும் பதார்த்தம்.

## பாம்புக்கும் - எள்ளுக்கும்.

5. ஆடிக்குடத்தடையுமாடும்போதேயிரையும்
மூடிதிறக்கின்முகங்காட்டும் - ஓடிமண்டை
பற்றிற்பரபரெனும்பாரிற்பிண்ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம்பெள்ளெனவேயோது.

பாம்பு.

இ - ள். ஆடிகுடத்து அடையும் - படமெடுத்தாடிக் குடத்திற்சேரும், ஆடும்போதே இரையும் - ஆடும்போதே இரைச்சலிடும், மூடிதிறக்கின் முகங்காட்டும் - பெட்டிமுதலியவற்றிலிட்டு மூடிததிறந்தால் தலையைநீட்டிக்காட்டும்,ஓடிமண்டைபற்றின் பரபரெனும்-(கடித்தவுடனே அதன்விஷமானது) ஏறி மண்டையிற்பற்றினால் பரபரென்றுதினவுண்டாகும், பாரில் பிள் நாக்கும் உண்டாம் - உலகில் அதற்குப்பிளவாகிய நாக்குமுண்டாயிருக்கும்.

எள்.

ஆடிகுடத்து அடையும் - செக்கிலிட்டாட்டப்பட்டு அதின்சாரமாகிய எண்ணெய்குடத்திற்சேரும், ஆடும்போதே இரையும் - செக்காடும்போதே சத்திக்கும், மூடிதிறக்கின் முகங்காட்டும் - குடத்திற்பெய்துமூடி (நுரையடங்கினபிறகு) திறந்துபார்த்தால பார்த்தவர்களுடைய முகச்சாயையைத் தனக்குள்ளேகாட்டும்,ஓடிமண்டைபற்றின் பரபரெனும் - (அது உச்சியில் வார்க்கப்படுமானல்) பரவியோடி மண்டையிற்பற்றின் பரபரென்று ஊரலெடுக்கும், பிண்ணாக்கும் உண்டாம் - (அதனிடத்து) பிண்ணாக்குமுண்டாகும், (ஆதலால்) உற்றிடு பாம்பு - (உவமையாற்) பொருந்துகின்ற பாம்பை, எள் எனவே ஓது - எள்ளென்றேகூறு. எ-று.

ஒற்றுமைபற்றி எள்ளையும் எண்ணெயையும் அபேதமாகக்கூறினர்.

### பாம்புக்கும் - எலுமிச்சம்பழத்துக்கும்.

6\. பெரியவிடமேசேரும்பித்தர்முடியேறும்
அரியுண்ணுமுப்புமேலாடும் - எரிகுணமாம்
தேம்பொழியுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம்பழம்.

இ - ள். தேம்பொழியும் சோலை - தேனைச்சொரிகின்ற சோலைசூழ்ந்த, திருமலைராயன் வரையில் - திருமலைராயனது வெற்பினகண், பாம்பும் எலுமிச்சம்பழம் - பாம்பும் எலுமிச்சம்பழத்துக்கு நிகராகும்.

பாம்பு.

பெரிய விடமே சேரும்-மிகுந்த நஞ்சைப்பொருந்தியிருக்கும், பித்தர் முடி ஏறும் - சிவபெருமானது திருமுடிமேலேறப்பெறும், அரி உண்ணும் - காற்றையுட்கொள்ளும், உப்பும் - (அதனுடல்) உப்புவதும், மேல் ஆடும் - மேலெழுந்தாடும், எரி குணம் ஆம் - கோபித்துச்சீறுங்குணமுள்ளதாகும்.

எலுமிச்சம்பழம்

பெரிய இடமேசேரும் - ராஜசமுகமுதலிய பெரியஇடங்களிற்சேரும், பித்தர்முடி ஏறும் - பித்தாதலேற்று (பித்தசாந்தியின்பொருட்டு) சாறுபிழிந்தேற்றப்படும், அரியுண்ணும் - ஊறுகாயினிமித்தம் அரிகருவியால் அரியப்படும், மேல் உப்பு ஆடும் - அதினைப்பிறகு உப்பிட்டுச் சலுசப்படும், எரி குணம் ஆம் - (அதின்சாறு இரஸமுந்திறப்படுதலால) எரியுங் குணமுடையதாகும். எ - று.

### முகுந்தனுக்கும் - முறத்துக்கும்.

7\. வல்லரியாயுற்றிடலால்மாதர்கைபற்றிடலால்
சொல்லரியமாப்புடைக்கத்தோன்றலால் - வல்லோர்
அகந்தனிலேவாழ்தலாலன்றுலகளந்த
முகுந்தனுமேயாகுமுறம்.

இ - ள். அன்று - (த்ரிவிக்ரமனான) அக்காலத்தில், உலகு அளந்த - உலகத்தைத்தனது திருவடியாலளந்த, முகுந்தனும் - திருமாலும், முறம் ஆகும் - முறத்துக்கு நிகராவன்.

முகுந்தன்.

வல் அரி ஆய் உற்றிடலால் - வலிய நரசிங்கமாய்த்தோன்றுதலால், மாதர்கையின்பற்றுதலால் - ஆய்ச்சியர் கையாற்பற்றப்படுதலால், சொல அரிய மா புடைக்க தோன்றுதலால் - (வலியின்னிலைமையிவ்வளவென்று) சொல்லுதற்கரிய (குவலயாபீடம் என்னும்) யானையை அழிக்கக்கண்ணை

ளுய் அவதரித்தலால், வல்லோா அகந்தனிலே வாழ்தலால் - (தன்னை நினைய) வல்லாரது மனத்தின்கண்ணே உறைதலால்.

மாதர்கையிற்பற்றினது-உரலிற்கட்டுதல், குரவைக்கூத்தாடுதல் முதலியவற்றிற்கு.

முறம்.

வல் அரி ஆய் உற்றிடலால்-விரைவில் அரிசியைக் கல்முதலியவையில்லாமல ஆராயுந்தொழிலைப் பொருந்துதலால, மாதா கையில் பற்றுதலால் - பெண்கள் கையிலேந்துதலால், சொல்அரியமாபுடைக்கத் தோன்றுதலால- (அளவு) சொலலுதற்கரிய மாவைப்புடைத்தெடுத்தற்குக்கருவியாயுண்டாயிருத்தலால், வலலோர் அகந்தனிலே வாழ்தலால்-இல்வாழக்கையில் வல்லோரது வீடுகளிலிருத்தலால், எ - று.

மலைக்கும் - சந்திரனுக்கும்.

8. நிலவாய்விளங்குதலானீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற்சென்று - தலைமேல்
உதித்துவரலாலுயர்மாமலையை
மதிக்குநிகராகவழுத்து.

இ - ள். உயர்மாமலையை-உயர்ந்த பெரியமலையை, மதிக்கு நிகர் ஆக வழுத்து-சந்திரனுக்கு உவமையாகக்கூறு.

மலை.

நிலம்வாய் விளங்குதலால்-பூமியினிடத்துவிளங்குதலால், சிலபோது நீளவான்படிந்து உலாவுதலால் - சிலகாலம் பெரியமேகங்கள் தன்னிடத்துவந்து படிந்துலாவப்பெறுதலால், தலைமேல்சென்று உதித்து வரலால் - சிகரங்கள் ஆகாயத்திற்செல்ல வளர்ந்துவருதலால்,

சந்திரன்.

நிலவு ஆய் விளங்குதலால்-நிலாவினையுடைத்தாய்ப் பிரகாசித்தலால், சிலபோது நீள்வான்படிந்து உலாவுதலால்-சிலநாள் நீண்ட ஆகாயத்திற்படிந்து சஞ்சரித்தலால், சென்று உதித்து அலைமேல் உதித்துவரலால்-அஸ்தமித்துப்போய் மறுநாள் இந்தக் கடல்முகட்டில உதயமாகிவருதலால், எ-று.

தேங்காய்க்கும் - நாய்க்கும்.

9. ஓடுமிருக்குமதனுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்குநாணாது - சேடியே
தீங்காயதில்லாத்திருமலைராயன்வரையில்
தேங்காயுநாயுமெனச்செப்பு.

இ - ள். சேடியே - தோழீ, தீங்கு ஆயது இல்லா - தீமையில்லாத, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், தேங்காயும் நாயும் இணைசெப்பு - தேங்காயையும் நாயையும் ஒப்பாகக்கூறு.

தேங்காய்.

ஓடும் இருக்கும் - (நாரோயன்றி) ஓடும் தன்னிடத்திருக்கப்பெறும், அதன் உள்வாய் வெளுத்து இருக்கும் - அதின் உட்புறம் வெளுத்திருக்கும், நாடும்குலைதனக்கு நாணாது - (யாவரும்)விரும்புதற்குரிய பெருங்குலை விடுதலால் வலியாது,

நாய்.

ஓடும்-(சிலநேரம்) ஓடித்திரியும்,இருக்கும் - (சிலநேரம்) இருந்த இடத்திற்றனேயிருக்கும், அதனவாய் உள்வெளுத்து இருக்கும் - அதின்வாயின் உள்ளிடம் வெளுத்திருக்கும், நாடும் - (புதியர்வரக்காணின்) உற்றுப்பார்க்கும், குலைதனக்கு நாணாது - (பார்த்தபிறகு) குரைக்குந்தொழிலில் சற்றும் பின்னிடாது. எ-று.

10. மன்னீரிலேபிறக்குமற்றலையிலேமேயும்
பின்னீச்சிற்குத்தும்பெருமையால் - சொன்னேன்கேள்
தேனுந்துசோலைத்திருமலைராயன்வரையில்
மீனும்பேனுஞ்சரியாமே.

இ - ள். தேன் உந்துசோலை - தேன்பாய்கின்ற சோலைசூழ்ந்த, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், மீனும்பேனும் சரி ஆம் - மீனும்பேனும் ஒன்றற்கொன்று நிகராகும், சொன்னேன் கேள் - சொன்னேன் நீ கேட்பாயாக.

மீன்.

மன் நீரிலேபிறக்கும் - பெருமையுள்ள நீரினிடத்தில் உற்பத்தியாகும், அலையிலேமேயும் - அந்தநீரலைகளில் மேய்ந்துகொண்டிருக்கும், (அப்படி மேயுமிடத்தில் ஏதாயினும் அரவம்கண்டால்) பின் நீச்சின்குத்தும்-பின்நீச்சினல் குத்தியோடும்.

மற்று - அசை.

பேன்.

மன் ஈரிலேபிறக்கும் - மிகுதியாக ஈரினிடத்துண்டாகும், மன்தலையிலேமேயும் - வலிமையாகிய தலையோட்டினமீது மேயும், பின ஈச்சின்குத்தும் - பிறகுபெண்களால் ஈச்சனறவாயின் ஒலிக்குறிப்போடு குத்தி நாசம்பண்ணப்படும், பெருமையால் - இந்தப்பெருமையினல், எ - று.

### கண்ணாடிக்கும் - அரசனுக்கும்.

**11** யாவருக்கும் வஞ்சனைசெய்தியாவருக்குமவ்வவராய்ப்
பாவனைபாய்த்தீதகலப்பார்த்தலால - மேவும்
எதிரியைத்தன்னுள்ளாக்கியேற்றரசத்தால
சதிருறலாலாடியரசாம.

இ - ள். ஆடி அரசு ஆம - கண்ணாடியானது அரசனுக்குச் சமானமாகும,

கண்ணாடி.

யாவருக்கும் வஞ்சனைசெய்து யாவருக்கும் அவ்வவராய் பாவனையாய் தீது அகல பார்த்தலால் - எல்லாருக்கும் களிப்பையுண்டாக்கி எல்லாருக்கும் அவரவரைப்போலப் பிரதிபலித்து முகத்திலுள்ள களங்கம் நீங்கத் திருத்தமாகப் பார்க்கப்படுதலால், மேவும் எதிரியை தன் உள் ஆக்கி ஏற்றரசத்தால் - வந்து எதிர்ப்பட்டவனுடைய சாயையைத் தனக்குள்ளேயடக்கத் தகுதி [illegible] ரசம் பூசப்பட்டிருத்தலால, சதிர் உறலால - அழகைப்பெற்றிருத்தலால்,

அரசன்.

யாவருக்கும் வஞ்சனைசெய்து யாவருக்கும் அவ்வவராய் பாவனையாய் தீது அகலபார்த்தலால் (தன் [illegible]) எல்லோர்க்கும் சந்தோஷத்தை யுண்டாக்கி எல்லார்க்கும் அவரவர் தகுதிக்கேற்பத் தன்னைப் பாவித்து தன் நாட்டிலுள்ள தீமைகளை நீக்குதலால், மேவும் எதிரியை தன் உள் ஆக்கி ஏற்ற அரசத்தால் - தன்மேல் போருக்குவருகின்ற பகைவனை உபாயத்தால் தன்வசப்படுத்தி [illegible] ராஜ்யத்தைக் கொண்டிருத்தலால், சதிர் உறலால் - பெருமையையடைந்திருத்தலால், எ - று.

### ஆட்டக்குதிரைக்கும் - காவிரியாற்றுக்கும்.

**12.** ஓடுஞ்சுழிசுத்தமுண்டாகுந்துன்னலரைச்
சாடும்பரிவாய்த்தலைசாய்க்கும் - நாடறியத்
தேடுபுகழான திருமலைராயன்வரையில்
ஆடுபரிகாவிரியாமே.

இ - ள். நாடு அறிய தேடுபுகழான் தேசமெல்லாமறியும்படி சம்பாதித்த பெரும்புகழையுடையவனாகிய, திருமலைராயன் வரையில திருமலைராயனது வரையகத்தில், ஆடுபரி - ஆட்டக்குதிரை, காவிரியாறு ஆம் - காவிரியாற்றிற்கு நிகராகும். எ - று.

ஆட்டக்குதிரை.

ஓடும் - வேகமாயோடும், சுத்தம் சுழிஉண்டாகும் - சுத்தமான சுழிகளையுடைத்தாயிருக்கும், துன்னலரைசாடும் - பகைவரைமுறிய அடிக்கும், பரிவாய்த்தலைசாய்க்கும் - (காண்பவருக்கு) விருப்பமுண்டாகத் தலைவளைத்து நடக்கும்,

காவிரியாறு.

ஓடும்-(நீர்பெருகி)ஓடும், சுழி (உண்டாகும்) நீர்ச்சுழிகளையுடைத்தாயிருக்கும், சுத்தம் உண்டாகும்-(தன்னிடத்தில் மூழ்கினவர்களுக்குப்) பரிசுத்தத்தையுண்டாக்குந் தன்மையையுடைத்தாயிருக்கும், துன் அலரை சாடும் நெருங்கிய மலர்களை யலைத்தெறியும், பரிவாய்ந்த அலைசாய்க்கும்-குதிரையுருவாய்ந்த அலைகளை மடக்கிவீசும், (ஆதலால்), எ - று.

வாய்த்தலையென்பதில் வாய்த்த எனனும் பெயரெச்சத்தகரம் தொகுத்தது.

கீரைப்பாத்திக்கும் - ஏறுதிரைக்கும்.

**13.** கட்டியடிக்கையாற்கான்மாறிப்பாய்கையால்
வெட்டிமறிக்கின்றமேன்மையால் - முட்டப்போய்
மாறத்திரும்புகையாலவளகீரைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே.

இ - ள். வள் கீரைப்பாத்தியுடன் - வளமாகிய கீரைப்பாத்தியோடு, ஏறு அப்பரி ஆகும் - ஏறு தற்குரிய அந்தக் குதிரையானது சமமாகும்,

கீரைப்பாத்தி.

கட்டி அடிக்கையால் - நிலத்தைக்கொத்தி மண் கட்டிகளை அடித்துடைக்கையால், கால் மாறிப்பாய்கையால்-ஒரு வாய்க்காலிலிருந்து மற்றொரு வாய்க்காலில் நீர் மாறிப்பாய்தலால், வெட்டி மறிக்கின்ற மேன்மையால்-சதுரஞ் சதுரமாக வெட்டித் தடுக்கப்படுகின்ற மேன்மையால், முட்டப்போய் மாறத்திரும்புகையால்-கடை மடையில் முட்டும் படிநேரே சென்று (அங்கிருந்து) மாறிவிடத்திரும்புதலால்,

ஏறு குதிரை.

கட்டி அடிக்கையால் - கட்டிக் கொட்படிக்கப்படுதலால், கால் மாறிப் பாய்கையால்-கால்மாறிமாறி யெழுந்து பாய்ந்து செல்லுதலால், வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - (தன்மேலேறிய வீரன்பகைவரை) வெட்டுந் திரும்புகின்ற மேன்மையுடைத்தாதலால், முட்டப்போய் மாறத்திரும்புகையால் - போகவேண்டிய இடமுழுதும்போய் மீளத்திரும்பிவருதலால், எ-று.

கொட்படித்தல் - குதிரையைத் திருப்பும்பொழுது அது உடனே திரும்பப் பழகுதற்குக் கழுத்திற் கயிறுகட்டிச் சாட்டைகொண்டு சுற்றிச் சுற்றியடித்தல்.

### ஆட்டுக்கும் - கதவுக்கும்.

14. செய்யுட் கிடைமறிக்குஞ் சேர்பலகை யிட்டுமுட்டும்
ஐயமறமேற் றாளடர்க்கு மேதூய்ய நிலை
தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்
ஆடுங் கதவுநிக ராம்.

இ - ள். புகழ்சேர் - கீர்த்தியானது விரும்பிவந்தடைகிற, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது மலையகத்தில், ஆடும் கதவும் நிகராம் - ஆடும் கதவும் ஒன்றற்கொன்று சமானமாகும்,

ஆடு.

செய் உள்கிடைமறிக்கும்-வயலில் (எருவின்பொருட்டு) கிடைமறிக்கப்படும், சேர் பலகையிட்டு முட்டும் - பொருந்திய பலகைகளைக் கொம்பினாற் குத்திமுட்டும், ஐயம் அறமேல்தாள் அடர்க்கும் - சந்தேகமற மிகுதியாகிய ஊக்கத்தோடு போர்புரியும், தூய்யநிலைதேடும்-பரிசுத்தமான இருக்கையைத் தேடும்,

கதவு.

செய்யுட்கு இடைமறிக்கும் - வீட்டுக்கிடையே யிடப்பட்டு வருவோரைத்தடுக்கும், சேர்பலகையிட்டு முட்டும் - ஒன்றற்கொன்று பொருத்தமான பலகைகளைக்கொண்டு மூட்டிச்செய்யப்படும், ஐயம் அறமேல் தாள் அடர்க்கும் - (யாரேனும் நுழைவார் என்கிற) சந்தேகம் நீங்கத்தான் மூட்டப்பட்டிருப்பதன்றித் தனமீது தாளிடப்பட்டிருக்கும், தூய்யநிலைதேடும் - அழகாகிய வாசற்காலை விரும்பும். எ - று.

செய்உள் - செய்யப்பட்ட உள்ளிடம். (அதாவது வீடு).

### ஆட்டுக்கும் - குதிரைக்கும்.

15. கொம்பிலையே தீனிதின்னுங் கொண்டதன்மேல் வெட்டுதலால்
அம்புவியி னன்னடையதாதலால் - உம்பர்களும்
தேடுநற்சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையுநே ராம்.

இ - ள். உம்பர்களும் தேடும் - தேவர்களும் தேடிவருதற்குரிய, நல்சோலை - அழகாகிய சோலைகள் சூழ்ந்த, திருமலைராயன் வரையில்-திருமலைராயனது வெற்பகத்தில், ஆடும் குதிரையும் நேர்ஆம் - ஆடும் குதிரையும் ஒன்றுக்கொன்று சமானமாகும்,

ஆடு.

கொம்பு இலையே தீனிதின்னும் - நுனிக்கொம்பிலுள்ள இலைகளையே இரையாகத்தின்னும், கொண்டதன்மேல் வெட்டுதலால் - (இடையனிடத்தில

இ - ள். பெருவானவில் - பெரியவானவில்லும், விண்டு-விஷ்ணு வும், வெற்றிலை-வெற்றிலையும், நேர் - ஒன்றுக்கொன்று நிகர்த்திருப்பன, (இதனை) பாரீர் - (உலகத்தீரே) பாருங்கள்,

வானவில்.

நீரில உளதால் - நீர்கொண்ட மேகத்திலுண்டாதலால், நிறம்பச்சை யால் - பச்சைநிற முண்மையால, திருவால-அழகாயிருப்பதால், பாரில்பகை தீர்க்கும்பான்மையால - பூமிக்குவிரோதமாகிய கோடைப்பகையை நீக்கு தன்மையால், சாரும மனுபல வினையைமாற்றுதலால - (உலகத்தில) பொருந்திய மனிதர்களுடைய பலதுன்பங்களையும நீக்குதலால்,

விஷ்ணு.

நீரில் உளதால்-பிரளயவெள்ளத்திலும் அழியாதிருத்தலால், நிறம் பச் சையால் - பச்சை நிறமுடைமையால, திருவால-திருமகளையுடைமையால், பாரில பகைதீர்க்கும்பான்மையால - உலகத்தில (தேவர் முனிவருக்குப்) பகைவராகிய அரக்கரை யழிக்குந்தன்மையால, சாரும் மனுபல வினையை மாற்றுதலால்-தன்னையடைந்த பிரமர்களுடைய பலபாவங்களையுமொழித் தலால,

வெற்றிலை.

நீரில் உளதால்-நீர்க்கால்களிலிருப்பதாலும், நிறம்பச்சையால-பச்சை நிறத்தால், திருவால் - மங்களமாதலால், பாரில்பகை தீர்க்கும்பான்மை யால் - உலகத்தில (ஒருவரோடொருவர்க்குள்ள) பகைத்தன்மையையொழித்துச்சமாதானப்படுத்துந் தன்மையால், சாரும மனுடல்வினையை மாற்று தலால் - உலகிற்பொருந்திய மக்களுடைய குடலின் நடுத்தோஷத்தை நீக்கு தலால், எ - று,

பூசுணிக்காய்க்கும் - பரமசிவனுக்கும்.

18. அடிநர்திசோதலாலாகம்வெளுத்துக்
கொடியுமொருபக்கத்திற்கொண்டு - வடிவுடைய
மாசுணத்தைப்பூண்டுவளைத்தழும்புபெற்றதனால
பூசுணிக்காயீசனெனப்போற்று.

இ - ள். பூசுணிக்காய் - பூசுணிக்காயையும், ஈசன் எனப்போற்று - பரமசிவனெனமதித்து வணங்கு,

பூசுணிக்காய்.

அடிநர்திசோதலால்-அடியிலகாம்பு பொருந்துதலால், ஆகம்வெளுத்து கொடியும ஒருபக்கத்திற் கொண்டுவடிவுடைய மாசுண்ணத்தைப் பூண்டு வளைத்தழும்புபெற்றதனல்-உடல்வெளுத்து ஒருபக்கத்தில கொடியையுங

கொண்டு அழகையுடைய வெண்சுண்ணத்தை மேற்புறத்தணிந்து வளைவாகிய தழும்புகளைப்பெற்றிருத்தலால்,

பரமசிவன்.

அடிநந்திசேர்தலால்-தன்கீழே இடபம் சேர்ந்திருத்தலால், ஆகம் வெளுத்து கொடியும் ஒருபக்கத்திற்கொண்டு வடிவுடைய மாசுணத்தைப்பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்-திருநீறுபூசுதலால் திருமேனிவெளுத்து ஒருபாகத்தில பூங்கொடிபோல் வாளாகிய உமாதேவியைவைத்துக்கொண்டு அழகையுடையசர்ப்பாபரணத்தைப் பூண்டு காமாக்ஷியம்மையாரது வளைத தழும்பையும் பெறறிருத்தலால், எ - று.

சிதம்பரதேவ என்பது நான்குதரம்வரப்பாடியது.

**19.** அரகர திருச்சிற்றம்பலவாணவந்
தரரூபமகேசசிதம் - பரதே
வசிதம்பரதேவசிதம்பரதே
வசிதம்பரதேவனே.

இ - ள். அரஅர - ஹரஹர, திருச்சிற்றம்பலவாண - திருச்சிற்றம்பலத்தில் வாழ்வோனே, அந்தரரூப-ஆகாயவுருவத்தையுடையவனே, மகேச-மஹேச்சரனே, சிதம்பரதேவ - சிதாகாயத்திலுள்ள தேவனே, சிதம்பர தேவசிதம்பரதேவ சிதம்பரதேவனே, எ - று.

அரன் - சங்கரிப்பவன். திருச்சிற்றம்பலம் - அழகிய சிற்சபை. இது சித்தம் பலத்தின் மரூஉ. மகேசன - பெருஞ்செல்வத்தையுடையவன்.

ஒரு அழகாகிய பெண்ணைப்பார்த்து வியந்து
ராமராமா, கோவிந்தா, வேங்கடவா, நாராயணா என்று பாடியது.

**20.** இந்தோதிலகநுதலாமராமாவனசக்
கொந்தோகளபமுலைகோவிந்தா - சந்தமுறும்
வேலோவிணைவிழிகள்வேங்கடவாநல்லவயி
றாலோகாணாராயணா.

இ - ள். ராமராமா—, (இந்தமாதுக்கு) திலகம் நுதல் இந்தோ-பொட்டணிந்த நெற்றி அஷ்டமிசந்திரனோ, கோவிந்தா—, களபமுலைவனசம கொந்தோ-கலவைச்சந்தநமணிந்த தனஙகள் தாமரையரும்புகளோ, வேங்கடவா—, இணை விழிகள் சந்தம் உறும்வேலோ - இருவிழிகளும அழகு மிகுந்த வேல்களோ, நாராயணா—, நல்லவயிறு ஆலோ-அழகாகிய வயிறு ஆலிலையோ, எ - று.

காண் - அசை.

### அடைசொல்லில்லாமல் ஒன்றுமுதல் பதினெட்டுவரையில் வரப்பாடியது.

**21.** ஒன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறுஏழெட்டு
ஒன்பதுபத்துப்பதினொன்று - பன்னி
ரண்டுபதின்மூன்றுபதினான்குபதினைந்துபதி
னாறுபதினேழ்பதினெட்டு.

இ-ள். வெளிப்படை.

### ஐந்து டு வரப்பாடியது.

**22.** ஓ கா மா வீ தோ நேரொக்க டு டு டு டு டு
நாகார்குடந்தைநகர்க்கிறைவா - வாகாய்
எடுப்பாரடமிடுவாரேறுவரன்பர்க்குக்
கொடுப்பாரணிவர்குழை.

இ - ள். நகு ஆர் குடந்தை நகர்க்கு இறைவர் - இளமரச்சோலைகள் நிறைந்ததிருக்குடந்தை நகரத்துக் கூத்தலைவராகிய சிவபெருமானவர், ஓகாமாவீதோ - ஓகாமாவீதோ என்னுமிவ்வைந்தெழுத்துக்களும், டுடுடுடு-டுடுடுடுடு என்னுமிவ்வைந்தெழுத்துக்களையும், நேர் ஒக்க-முறையே பொருந்தலால், (உண்டாகிய ஓடுகோடு மாடுவீடு தோடு என்னும் ஐந்தனுள் ஒன்றாகிய) ஓடு-ஓட்டை, வாகு ஆய் - அழகாக, எடுப்பர் - கைக்கொள்வர், (ஒன்றாகிய) காடு-சுடுகாட்டில, நடம்புரிவர்-நடனம்பண்ணுவர், (ஒன்றாகிய) மாடு - இடபத்தின்மேல், ஏறுவர் - ஊர்வர், (ஒன்றாகிய) வீடு-முத்தியை, அன்பர்க்குகொடுப்பர் - தம்மடியார்க்குத் தந்தருளுவர், (ஒன்றாகிய) தோடு-காதணியை (குழையை) அணிவர்-காதில் தரிப்பார், எ - று.

நாகு ஆர் என்பதற்கு வயல்களில் சங்குகள்நிறைந்த எனினுமாம். குடந்தைநகர் - கும்பகோணம்.

### குடத்திலே கங்கையடங்கும் எனப்பாடியது.

**23.** விண்ணுக்கடங்காமல்வெற்புக்கடங்காமல
மண்ணுக்கடங்காமல்வந்தாலும் - பெண்ணை
இடத்திலேவைத்தவிறைவர்சடாம
குடத்திலேகங்கையடங்கும்.

இ - ள். கங்கை - கங்காநதியானது, விண்ணுக்கு அடங்காமல்-ஆகாயத்திலடங்காமலும், வெற்புக்கு அடங்காமல் - மலைகளில் அடங்காமலும், மண்ணுக்கு அடங்காமல் - பூமியிலடங்காமலும், வந்தாலும் - பெருகிவரி

னும், பெண்ணை - உமாதேவியை, இடத்திலேவைத்த இடப்பாகத்திலிருத்தினை, இறைவர்:-பரமசிவனது, சடாமகுடத்திலே அடங்கும - சடையாகிய கிரீடத்தில் அடங்கும் எ-று.

### பச்சைவடம் பாகுசேலைசோமன் என்றுபாடியது.

**24.** மாயன்றுயின்றதுவுமாமலராள்சொல்லதுவும
ஏயகுருந்திற்கொண்டேறியதும - தூயை
இடப்பாகனசென்னியினமேலேறியதுமபச்சை
வடப்பாகுசேலைசோமன.

இ - ள். மாயன் றுயின்றதுவும-திருமால்மஹாப்பிரளயத்தில் திருக்கண்வளர்ந்ததும, மாமலராள் சொல்லதுவும - பெருமையுள்ள தாமரைமலரையாசனமாகவுடையவளாகிய திருமகளது சொல்லும், கொண்டு ஏயகுருந்தில் ஏறியதும - கண்ணனெனவவதரித்துக்கொண்டு குருந்தமரத்தில் ஏறியதும், தூயை இடப்பாகன் சென்னியின்மேல ஏறியதும-பரிசுத்தையாகிய உமாதேவியை யிடப்பாகத்திலிருத்திக் கொண்டருளிய பரமசிவனது திருமுடியின் மீதேறியதும், பச்சை வடம பாகுசேலை சோமன்- (முறையே) பசசைநிற முள்ள ஆலிலையும சாக்கரைக்கட்டியாகும் சேலையும சந்திரனும ஆம், எ - று.

சேலை - கோபிகைகளை நாணச செய்யககவர்ந்தபுடவை.

### கின்னரிவாசிக்குங் - கிளியெனப்பாடியது.

**25.** ஆடலபுரிந்தானென்றுமந்நாளின்மூவா
பாடலுகந்தானென்றுமபாணனையின்றும - கூடலிலே
நன்னரிவாசிக்குநடையபயிற்றினானென்றும்
கின்னரிவாசிக்குங்கிளி.

இ - ள். கிளி - கிளியானது, ஆடல் புரிந்தான் என்றும் - திருவிளையாடல்களைச் செய்தவனேயென்றும், அந்நாளில மூவாபாடல் உகந்தான என்றும்-அக்காலத்தில மூவாபாடலையுகந்தருளினவனே யென்றும், பாணனையின்றுலகூடலிலே நல்லரிவாசிக்கு நடையபயிற்றினான்என்றும-(அனபாக் கெளியனாகும்) குணத்தினால திருவாலவாயில நல்லரிகளாகிய குதிரைகளுக்கு நடைகற்பித்தவனே யென்றும் (புகழ்ந்துபாடி), கின்னரிவாசிக்கும -கின்னரியைவாசித்துக கொண்டிருக்கும, எ - று.

ஆடல் - மதுரையிற செய்த அறுபத்து நான்கு திருவிளையாடல்கள். மூவர்பாடல் - அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தா என்னும் மூவரும பாடிய தேவாரம்.

பொன்னுவரையிலை காய்பூவென்றுபாடியது.

26. உடுத்ததுவுமெய்த்ததுவுமும்பர்கோன்றன்னால்
எடுத்ததுவுமபள்ளிக்கியையப - படுத்ததுவும்
அந்நாளெறிந்ததுவுமன்பினிரந்ததுவும
பொன்னுவரையிலைகாய்பூ.

இ-ள். (திருமாலானவர்) உடுத்ததுவும் - ஆடையாயுடுத்ததும், மேய்த்ததுவும்-(க்ருஷ்ணாவதாரத்தில்) மேய்த்ததும், உம்பர்கோன்தன்னால்எடுத்ததுவும்-தேவர்கோனாகிய இந்திரன் பெய்வித்த கல்மழையைத்தடுக்கும் பொருட்டுக் குடையாயெடுத்ததுத் தாங்கியதும, பள்ளிக்குஇயையபடுத்ததுவும் - (மஹாப்பிரளயத்தில் தன) சயனத்துக் கிசையக்கொண்டு படுத்ததும, அந்நாள் எறிந்ததுவும் - அக்காலத்தில் (கன்றைக்குணிலாகக் கொண்டு) எறிந்ததும், அன்பின் இரந்ததுவும - விருப்பத்தினால் மஹாபலியினிடத்தில் யாசித்ததும், பொன் ஆ வரை இலை காய் பூ-(முறையே) பொனனும், பசுக்களும் (கோவர்த்தந) கிரியும், ஆலிலையும், விளங்காயும், நிலமும் ஆம, எ - று.

கச்சிக்காவலன் என்பவரொருவர் செங்கழுநீர்க்கிழங்கென்று பாடவேண்டுமெனப் பாடியது.

27. வாதமணரேறியதுமாயன்றுயின்றதுவும்
ஆதிதடுத்தாட்கொணடவவ்வுருவும - சீதரனார்
தாள்கொணடளந்ததுவுந்தணகச்சிக்காவலா
கேள்செங்கழுநீர்க்கிழங்கு.

இ - ள். தண்கச்சிக்காவலாகேள் - சாந்தகுணத்தையுடைய கச்சிக்காவலனே நீ கேட்பாயாக, வாது அமணர் ஏறியதும - (திருஞானசமபந்தசுவாமிகளோடு)வாதுசெய்த சமணர்கள தோற்றுஏறியதும, மாயன் துயின்றதுவும் - திருமாலானவா திருக்கண்வளர்ந்ததும், ஆதிதடுத்து ஆட்கொண்ட அவ்வுருவும்-முதல்வனாகிய சிவபெருமான (சுந்தரமூர்த்திசுவாமிகளை) தடுத்தாட்கொண்ட அந்த ருபமும, சீதரனார் தாள்கொண்டு அளந்ததுவும் - திருமாலானவர் (திரிவிக்ரமாவதாரத்தில தம்) திருவடியைக்கொண்டு அளந்ததும்,செங்கழு நீர் கிழம் கு-(முறையே) செஙகழுவும நீரும் கிழப்பருவமும் பூமியும் ஆம். எ - று.

செங்கழு-எரியெண்ணெய்ச் சுவாலைகளால் செந்நிறமேறியகழுமரம். நீர் என்றது பாறகடலை.

நா நீ நா நே என்றுபாடியது.

28. அரையின்முடியிலணிமார்பினெஞ்சில
தெரிவையிடத்தமர்ந்தான்சோலை - புரையறவே
மானார்விழியீரமலரணவொற்றீருகுக
ஆனாலாநீநாநே.

இ - ள். மான் ஆர்விழியீர்-மானினது மருண்ணோக்கம்போலும் நோக்கத்தையுடையமாதரோ, மலரண ஒற்று - ம ல் ர் ண் என்னும் இந்நான்கொற்றுக்களும், நாநீநூநோஈறு ஆகும் ஆனல்-நாநீநூநோ என்னும் இந்நான்கெழுத்துக்களுக்கும் தலைதடுமாற்றமாய் இறுதியாக வருமாயின், தெரிவை இடத்து அமர்ந்தான் - உமாதேவியை இடப்பாகத்திலிருக்க விரும்பினவனாகிய சிவபெருமானது, அணையில் முடியில் அணிமார்பில் நெஞ்சில் - திருவணையிலும் திருமுடியிலும் அழகிய திருமார்பிலும் திருமிடற்றிலும், புணை அற சேவை ஆம் - குற்ற மறச்சேர்க்கப்படுதற் குரியன ஆகும். எ - று.

தலைதடுமாறறம்-எதிர்நிரனிறை. {ம ல் ர் ண் / நா நீ நூ நோ} இதையுய்த்துணர்க.

நேம் - விஷம். நெஞ்சு - கண்டத்துக் காயிறறு. நே - அன்பு. இது நேம் என மருவியது என்றவுமொன்று.

ஈயேற மலைதுலுங்கப் பாடியது.

29. வாரணங்களெட்டுமகமேருவுங்கடலும
தாரணியுமெல்லாஞ்சலித்தனவால் - காரணனைப்
பண்வாயிடைச்சிபருமத்திறலடித்த
புண்வாயிலீமொய்த்தபோது.

இ - ள். காரணனை-(திருவாய்ப்பாடியில்கண்ணனாயவதரித்திருந்த) ஸ்ரீமந்நாராயணனை,பண்வாய் இடைச்சி-இசைபோலுஞ் சொல்லையுடைய யசோதைப்பிராட்டி,பருமத்திறல்அடித்த-பருததமத்திறலடித்ததனாலுண்டாகிய, புண்வாயில் - புண்ணினிடத்து, ஈமொய்த்தபோது - ஈக்கள்மொய்க்க அருவருத்தசைந்தபோது, வாரணங்கள் எட்டும்-திக்குயானைகள் எட்டும், மகமேருவும் - மகாமேருமலையும், கடலும் - ஏழ்கடலும், தாரணியும்- உலகங்களும் ஆகிய, எல்லாம் - எல்லாப்பொருள்களும், சலித்தன - அசைந்தன, எ - று.

ஆல் - அசை. எல்லாவுலகங்களும் அவற்றிலுள்ள திக்கு யானைகள் முதலியவும் இறைவனது திருவயிறறில்வைத்துக்காக்கப்படும் பொருள்களாதலால் அவனசைந்தபோது அவையும் அசைந்தனவெனக.

பிறவாநெறிகாட்டியார் என்பவர்

கடுங்காற்றுமழைகாட்டும் கடுநட்புப்பகைகாட்டும்என்றிறுதியிலமைத்து ஒருவெண்பாவைப்பாடுகவென அவரைக்கடிந்துபாடியது.

30 நீரோபிறவாநெறிகாட்டியாரெமக்கு
நீரோசமிசைநிலையிட்டீர் - நீரோவிவ்
விங்களமேள்செய்தீர்விடுங்கடுங்காற்றுமமழைகாட்
டுங்கடுநட்புப்பகைகாட்டும.

இ - ள். பிறவாநெறிகாட்டியார் நீரோ-பிறவாநெறிகாட்டியார் என்பவர் நீர்தாமோ, எமக்குசமிசை நிலையிட்டீர் நீரோ - எமக்கு (இப்படிப் பட்டகடிநமாகிய) சமிசையை யேற்படுத்தினவர் நீர்தாமோ, இவ்விங்களம் செய்தீர் நீரோ - இந்தவேறுபாடுசெய்தவர் நீர்தாமோ, ஏன் - யாதுக்கு இவ்வாறு செய்தீர், விடும்-(இந்தமட்டிறபோதும்) விடும், கடுங்காற்று மழைகாட்டும் - பெருங்காறறு மழையையுண்டாக்கும், கடுநட்பு பகைகாட்டும்-பெருநட்புப்பகையையுண்டாககும், எ - று.

விநாயகர்க்கும் - முருகர்க்கும் - பரமசிவனுக்குஞ்சிலேடை.

31. சென்னிமுகமாறுளதாற்சேர்கரமுன்னாலுகையால்
இன்னிலத்திற்கோடொன்றிருக்கையால - மன்னுகுளக்
கண்ணுறுதலானுங்கணபதியுஞ்செவ்வேளும்
எண்ணரனுநேராவரே.

விநாயகர்.

இ - ள். சென்னி முகம்மாறு உளதால்-தலையும் முகமும் மாறுயிருத்தலால், சேர்கரம் முன்நாலுகையால் - பொருந்தியது திக்கையானது முற்புறத்தில் தொங்குதலால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால்-இவ்வுலகத்தில் ஒற்றைக்கொம்பு உண்டாயிருத்தலால், மன்னுகுளக் கண் உறுதலால்-நிலைபெற்ற வெல்லத்திறைற் செய்தவுருவத்தில் ஆவிர்ப்பவித்தலால்,

முருகர்.

சென்னிமுகம் ஆறு உளதால் - முடியும் முகமும் ஆறுண்டாதலால், சேர்கரம் முந்நாலுகையால் - சேர்ந்த ஒளியுள்ள பன்னிரண்டுகைகளுண்டாதலால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால்-இவ்வுலகத்தில் திருச்செங்கோடென்னும் தலமொன்றுண்டாயிருத்தலால், மன்னுகுளக்கண் உறுதலால் - நிலைபெற்ற சரவணப்பொய்கையில் அவதரித்தலால்,

பரமசிவன்.

சென்னிமுகம் ஆறு உளதால் - சிரசில் கங்காநதியிருத்தலால், முன்சேர் கரம் நாலுகையால் - முறபக்கத்திற் சேர்ந்த ஒளியுள்ள நான்கு கைகளுண்டாதலால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகத்தில் (கைலாச) மலையொன்றுண்டாயிருத்தலால், மன்னுகுளக்கண் உறுதலால்-நிலைபெற்ற நெற்றிக்கண்ணையுடைத தாயிருத்தலால்.

இன்னிலம் என்பதில் பொருளுக்கிணங்க நகரணகரங்களையேற்ற பெற்றிகொள்க.

ஒருவர், மும்மூர்த்திகளின் பெயர், அவர்கள் தின்னுங்கறி, உண்ணுமுணவு, ஏந்தும் ஆயுதம், பூணும் பூஷணம், ஏறும்வாகனம், வசிக்குமிடம் இவைகளை ஒருவெண்பாவிலடக்கிப் பாடவேண்டுமெனப் பாடியது.

**32.** சிறுவனளைபயறுஞ்செந்நெற்கடுகு
மறிதிகிரிதண்டுமணிநூல் - பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னமவேதனரனமாலுக்குக்
கற்றாழம்பூவேகறி.

இ - ள். வேதன அரனமாலுக்கு-பிரமன் சிவன் விஷ்ணு என்னும் மூவருக்கும், கறி - கறிகளாவன, பயறு சிறுவன அளை - பயறு, பிள்ளை, வெண்ணெய் இம்மூன்றுமே, (உணவு) உணவு-களாவன, செந்நெல கடுகு-செந்நெல், விஷம், பூமி இம்மூன்றுமே, (ஆயுதம்)-ஆயுதங்களாவன, தண்டு மறி திகிரி - தண்டம், மான், சக்கரம் இம்மூன்றுமே, (பூஷணம்)-பூஷணங்களாவன, நூல் பொறிஅரவம் மணி உபவீதம், புள்ளிகளையுடைய பாம்பு, கௌஸ்துபரத்னம் இம்மூன்றுமே, (வாகனம்)-வாகனங்களாவன, அன்னம் வெற்றேறு புள் - அன்னம், வெள்ளிய இடபம், கருடன் இம்மூன்றுமே, (இடம்) இடங்களாவன, பூ கல் தாழ்அம-தாமரைமலர், கைலைமலை, ஆழ்ந்த பாற கடல் இம்மூன்றுமே, எ - று.

ஒருவர், இராசிகளின பெயரும், முறையும், தொகையும் அடைமொழியில்லாமல் ஒருவெண்பாவிலமைத்துப் பாடவேண்டுமென, முதலில் பகருங்கால் என்றும், இறுதியில் வசையறுமிராசிவளம் என்றும் சேர்த்துப்பாடியது.

**33.** பகருங்கான்மேடமிடபமமிதுனங்காக்க
டகஞ்சிங்கங்கன்னிதுலாம்விர்ச் - சிகந்த
நுசுமகரங்கும்பமீனம்பன்னிரண்டும
வசையறுமிராசிவளம்

இ - ள். வெளிப்படை.

தை மாசி பங்குனிமாதம் என்றுபாடவேண்டுமெனப் பாடியது.

**34.** பாணர்க்குச்சொல்லுவதும்பையபுனலைமூடுவதும்
தாணுவுரித்ததுவுஞ்சக்கரத்தோன் - ஊணதுவும
எம்மானையேத்துவதுமீசனிடத்துஞ்சிரத்தும்
தைம்மாசிபங்குனிமாதம.

இ - ள். பாணர்க்குச சொல்லுவதும-தையற்காரருக்குச்செய்யென்று சொல்லுவதும், தை-தையென்னுஞ்சொல்லே, பையபுனலை மூடுவதும்-பசிய நீரைமூடுவதும், மாசு - பாசிக்கொத்துகளே, தானு உரித்ததுவும-சிவபெரு

மான் உரித்ததுவும் - இபம் - யானையையே, சக்கரத்தோன் ஊணதுவும் - சக்ராயுதத்தையுடைய திருமாலுக்கு உணவாவதும், கு - பூமியே, எம்மானை ஏத்துவதும் - சிவபெருமானைத் துதிப்பதும், உன்னி - மனத்தில் நினைத்தே, ஈசன் இடத்தும் - சிவபெருமானது இடப்பாகத்திலிருப்பதும், மாது - உமாதேவியே, (ஈசன்) சிரத்தும் - சிவபெருமானது திருமுடியிலிருப்பதும். அம் - நீரே, எ - று.

சிதம்பரத்திலிருக்கும் ஞானசபைமுதலியவை.

35. ஞானசபைகனகசபைசிற்றம்பலமமே
லானந்தக்கூடந்திருமூலட் - டானமமே
லம்பலமபஞ்சாவரணநாற்கோபுரமம்பாற்
க.......ண்டபஞ்சிவகங்கை.

இ - ள். வெளிப்படை.

திருவாரூரிலுள்ள சங்குதீர்த்தமுதலியவை.

36. சங்குதீர்த்தந்திருச்சாளரவாயிலவீர
சிங்காசனந்திருவந்திக்காப்பு - பங்குனிமா
தத்திருநாடோத்தந்திருவிஞ்ஞதன்கோயில்
உத்தரபாகந்திருவாரூர்.

இ - ள். வெளிப்படை.

ஏகாம்பரநாதனைத் தரிசிக்கும்போது அங்குள்ள பிராமணர்கள் இவரை அலக்ஷியமாகநினைத்து, இவன் கவிபாடுந்திறத்தை அறிவோமென்று, இந்தத்தலத்தில் ஆறு அற்புதங்களிருக்கின்றன, அவற்றை ஒரு வெண்பாவில் அடக்கிப்பாடித்தரவேண்டுமென, அவையாவையென்று இவர்கேட்க, அவர்கள், குமரகோட்டக்கீரை, செவ்விலிமேட்டுப் பாகற்காய், பருத்திக்குளநீர், செப்புவாசற்காற்று, கம்பத்தடியிற்றவம், கருமாறிப் பாய்ச்சல், என்பவைகளே யென்றுசொல்ல, இவர், முதலில் அப்பா என்பதையும், இறுதியில் யார்க்கு மினிது என்பதையும் சேர்த்து, நீங்கள் இப்போது சொன்னபடி சொல்லுங்கள் என, அப்படியே அவர்கள் சொல்லி ஒரு வெண்பாவாய் முடிந்திருக்கக்கண்டு அதிசயித்தார்கள், அவ்வெண்பா வருமாறு.

37. அப்பாகுமரகோட்டக்கீரைசெவ்விலிமேட்
டுப்பாகற்காய்பருத்திக்குளநீர் - செப்புவா
சற்காற்றுக்கம்பத்தடியிற்றவங்கருமா
றிப்பாய்ச்சலயார்க்குமினிது.

இ - ள். வெளிப்படை.

அதிமதுரகவி, திருமாலவதாரம் பத்தினையும் ஒரு வெண்பாவி லடக்கிப் பாடவேண்டுமென, இதற்கு ஒரு வெண்பாவும்வேண்டுமோ, நான்பாதிவெண்பாவிற் பாடுவேனென்று பாடியது.

38. மெச்சுபுகழ்வேங்கடவாவெண்பாவிற்பாதியிலென்
இச்சையிலுன்சென்மமெடுக்கவா-மச்சாகூர்
மாகோலாசிங்காவாமாராமாராமாரா
மாகோபாலாமாவாவாய்.

இ - ள். மெச்சு -(தேவர்முனிவர்முதலியயாவரும்) மெச்சுகின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, வேங்கடவா - திருவேங்கடமுடையானே, என் இச்சையில் - என்விருப்பப்படி, வெண்பாவின்பாதியில் - பாதிவெண்பாவில், உன் சென்மம் எடுக்க-உன் திருவவதாரம் பத்தையுமெடுத்துக் கூறுதற்கு, வா - க்ருபைசெய்ய எழுந்தருள்வாய், மச்சா-மச்சாவதாரத்தைச் செய்தவனே, கூர்மா - கூர்மாவதாரத்தைச்செய்தவனே, கோலா - வராகாவதாரத்தைச்செய்தவனே, சிங்கா - நரசிங்கனே, வாமா - வாமநனே, ராமா - பரசுராமா, ராமா - தசரதராமா, ராமா - பலராமா, கோபாலா - க்ருஷ்ணா, மா ஆவாய்-இனிக்கற்கி அவதாரஞ்செய்யப் போகிறவனே, எ-று.

மச்சம் - மீன். கூர்மம் - ஆமை. கோலம் - பன்றி. வாமநம் - குறள், மா - குதிரை, இந்த அவதாரம் இனிச்செய்யப்போகிற தாதலால் ஆவாய் என எதிர் காலத்தாற் கூறினார்.

கும்பகோணத்தின் சின்னங்களைப்பாடியது.

39. திருக்குடந்தையாதிகும்பேசர்செந்தா
மரைக்குளங்கங்கைமகங்கா - விரிக்கரையின்
ஓரங்கீழ்க்கோட்டங்காரோணமங்கைநாயகியார்
சாரங்கபாணிதலம்.

இ - ள். வெளிப்படை.

திருவண்ணாமலையில், உண்ணாமுலையம்மையார் கோயில் ஸ்தானீகனாகிய சம்பந்தாண்டான் என்பவன் அம்பட்டனிடத்தில் தன்தலை மழுங்கமுண்டிதமாகச்சௌளம்பண்ணிக்கொள்ளும் சமயத்தில் இவர் அவ்விடஞ்சென்றார், அப்பொழுது அவன் இவரைக்கண்டு மரியாதை செய்யாமல், வித்தியாகர்வத்தினால், இந்தஸ்தலத்தின் பெயரும், என் பெயரும் நான் சௌளஞ்செய்துகொள்வதும் ஒருவெண்பாவில் அமைத்து, மன்என்றெடுத்து, மலுக்கென்று முடிக்கவேண்டுமென்று சொல்ல, இவர் அவனை ஒருபொருளாகமதியாமல், இவனைப்பரிஹசி

ப்பதேததுதியென்று நினைத்து, அவன் கேட்டகேள்வியின்படியேயன்றி அவன் சௌளம்பண்ணுவித்துக்கொள்வதற்குக் காரணமும் கற்பித்து வினாவிடையாகப் பாடியது.

40. மன்னுதிருவண்ணாமலைச்சம்பந்தாண்டாற்குப்
பன்னுதலைச்சவரமபண்ணுவதேன் - மின்னின்
இளைத்தவிடைமாதரிவன்குடுமிபற்றி
வளைத்திழுத்துக்குட்டாமலுக்கு.

இ - ள். மன்னு திருவண்ணாமலை - நிலைபெற்ற திருவண்ணாமலையிலுள்ள, சம்பந்தாண்டாற்கு - சம்பந்தாண்டான் என்பவனுக்கு, பன்னு தலைச்சவரம்பண்ணுவது ஏன்-சொல்லப்பட்ட தலைச்சவரம் பண்ணுவது யாதுக்கு,

(இது வினா),

மின்னின் இளைத்த இடை-மின்னற்கொடியினும் மெலிந்த (நுட்பமாகிய) இடையையுடைய,மாதர்-பெண்கள், இவன்குடுமிபற்றி-இவன் குடுமியைப் பிடித்து, வளைத்து இழுத்துக்குட்டாமலுக்கு - வளைத்திழுத்துக் குட்டாதிருத்தற்பொருட்டு, எ - று.

(இது விடை)

குடுமி பற்றிவளைத் திழுத்துக் குட்டுதல் ஊடற்காலத்தில்.

சோ கா மா ஏ வா தா என்று பாடியது.

41. சோ கா மா ஏ வா தா சொல்லின்மனைக்கூட்டியுமை
பாகார்ந்ததில்லைப்பரமேசர் - வாகாய்த்
தரித்தாரெரித்தார்தறித்தாருதைத்தார்
உரித்தார்கணைபடைத்தாரூர்க்கு.

இ - ள். உமை பாகு ஆர்ந்ததில்லைப்பரமேசர்-உமாதேவியை இடப்பாகத்திற் பொருந்தியிருக்கிற தில்லைப் பரமசிவனானவர், சோகாமாஏவாதாசொல்லில் - சோ, கா, மா, ஏ, வா, தா, என்னுஞ் சொற்களினிறுதியில், மன் னைக்கூட்டி - மன் என்பதனைச் சேர்த்து,(இந்தச்சொற்பொருள்களைமுறையே) வாகு ஆய்த்தரித்தார் - அழகாகத்தரித்தார், எரித்தார்-தகித்தார், தறித்தார் - கொன்றார், உதைத்தார் - காலாலுதைத்தார், உரித்தார்-தோலுரித்தார், ஊர்க்குகணைபடைத்தார் - முப்புரங்களை யழித்தற் பொருட்டு அம்பாகக்கொண்டார், எ - று.

| சோமன், | காமன், | மாமன், | ஏமன், | வாமன், | தாமன், |
|---|---|---|---|---|---|
| சந்திரன், | மன்மதன், | தக்கன், | யமன், | வாமநன், | திருமால், |

கோட்டைப்பாக்கு என்றெடுத்துக் களிப்பாக்கு என்றுமுடித்தது.

**42.** கொட்டைப்பாக்குமமொருகண் கூடையைப்பாக்கும்மடியில்
பிட்டைப்பாக்குமபாகமபெண்பாக்கும் - முட்டநெஞ்சே
ஆரணனுநாரணனுமாதிமறையுந்தேடும்
காரணனைக்கண்டுகளிப்பாக்கு.

இ - ள். நெஞ்சே - மனமே, கொட்டைப்பாக்கும்-மண்வெட்டியை நோக்குவோனும் ஒருகண் கூடையை பாக்கும் - ஒருகண்ணினால் கூடையைநோக்கு வோனும, மடியில் பிட்டைப்பாக்கும் - தன் மடியிலுள்ள பிட்டினை நோக்குவோனும், பாகம் பெண்பாக்கும் - தன் இடபபாகத்திலுள்ள உமாதேவியை நோக்குவோனும், முட்ட - முழுதும், ஆரணனும் நாரணனும் ஆதிமறையும் தேடும - பிரமனுலும விஷ்ணுவினுலும் பழமையாகிய வேதங்களாலும் தேடப்படுவோனுமாகிய, காரணனை-சர்வகாரணனுகிய பரமசிவனை, கண்டு - தரிசித்து, களிப்பு ஆக்கு - மகிழ்தலைசெய், எ - று.

களிப்பாககு-களிக்க என வினையெச்சமாக்கி,பாக்கும் என்னும் வினைமுற்றுக்களோடியைப்பினும பொருநதும். களிகக என்றது மதுரையில வையையாற்றங்கரையில செம்மனச செல்வியிட்டபிட்டின்பொருட்டு மண் சுமக்கவந்தகாலத்தில் அங்கிருந்தார்களிகக என்றபடி. பாக்கும-பார்க்கும என்பதன் மரூஉ.

செருப்புஎன்றுஎடுத்து விளக்குமாறுஎன்றுமுடித்தது.

**43.** செருப்புக்குவீரர்களைச்சென்றுழக்குமவேலன்
பொருப்புக்குநாயகனைப்புல்ல - மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத்தாமரைமேலவீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறு.

இ - ள். செருபுக்குச்சென்று-போர்க்களத்திற புகுந்துபோய, வீரர்களை உழக்கும்-வீரர்களைச்சிதறக்கலக்குகின்ற, வேலோன்-வேலாயுதத்தையுடையவனுகி, பொருப்புக்குநாயகனைப்புல்ல-குறிஞ்சிநிலத்தலைவனுமாகிய முருகவேளை நான்தழுவுதறகு,மருபுக்கு-வாசனைபொருந்தி, தண்தேன்பொழிந்த-குளிர்ச்சியாகிய தேனைச்சொரிந்த, திருததாமரைமேல வீற்றிருககும்-அழகிய தாமரைமலாமீது வீற்றிருக்கின்ற,வண்டே-வண்டுகளே,ஆறுவிளக்கும்-எனக்கு (அவனிருக்குமிடத்துசசெல்லும்,) வழியை விளங்கக்காட்டுங்கள், எ - று.

ஆறுவிளக்கும் - என்பதற்கு தழுவுதறகுரியவழி (உபாயம்) விளங்கப் பண்ணும, எனினும், ஒழுஙகாகச்சென்று என்கமையலை அவனுக்கு விளங்கக்கூறும், எனினும், ஆறுகால்களால் விளாவாரியோடி விளக்கும் எனினும் அமையும். இது வணடுவிடுதூதென்று கொள்ளலாம்.

### கரிஎன்றுஎடுத்து உமிஎன்றுமுடித்தது.

**44.** கரியதனையேயுரித்தகையா வளையேந்
தரியயற்குமெட்டாதவையா - பரிவாக
அண்டரெல்லாங்கூடியமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கேயுமி.

இ - ள். கரியதனையே உரித்தகையா - யானையையுரித்தகையனே, வளை ஏந்து அரி அயற்கும எட்டாத ஐயா - சங்கத்தை யேந்தினதிருமாலுக்கும் பிரமனுக்கும் எட்டாத ஐயனே, அண்டர் எல்லாம் - தேவர் எல்லாரும், பரிவாகக்கூடி - விருப்பமாகக்கூடி, அமுதம் கடைந்த பொழுது - திருப்பாற்கடலில் அமுதத்தின் பொருட்டுக்கடைந்த காலத்தில், உண்ட நஞ்சை - உண்டவிஷத்தை, இங்கேஉமி-இவ்விடத்தில் உமிழ்ந்துவிடு, எ-று

ஐயா என்பதற்கு அழகனே யென்றும், தெய்வத்தன்மையுள்ளவனே யென்றும் உரைக்கலாம.

### இதுவும் அது.

**45.** கரிக்காய்பொரித்தாள்கன்னிக்காயைத்தீத்தாள்
பரிக்காயைப்பச்சடியாபபண்ணினாள் - உருக்கமுள்ள
அப்பைக்காய்நெய்துவட்டலாக்கினளத்தைமகள்
உபபுக்காணசீசீயுமி.

இ - ள். அத்தைமகள்-அத்தைமகளானவள்,கரிக்காய்பொரிததாள்-கரிக்காயைப் பொரித்தாள், கன்னிககாயைததீததாள் - கன்னிக்காயை வறுத்தாள்,பரிக்காயைபச்சடியாப் பண்ணினாள்-பரிக்காயைப் பச்சடியாகச் செய்தாள், உருககம் உள்ள அப்பைக்காய் நெய்து வட்டல் ஆக்கினாள் - (எனக்கு) பிரீதியான அப்பைக்காயை நெய்துவட்டல் ஆக்கினாள், (ஆயினும்) உப்பு - உப்புமிகுதியாயிற்று, (ஆதலால்) சீசீ உமி - சீசீ உமிழ்ந்துவிடு, எ - று

கரி - யானை, இதற்குப பரியாயம அத்தி ஆதலால் கரிக்காய் என்றது அத்திக்காயை.

கன்னி - தெய்வப்பெண, இவளுக்குப்பரியாயம அரம்பை, அரம்பை வாழை ஆதலால், கன்னிக்காய் என்றது வாழைககாயை.

பரி - குதிரை, இதற்குப்பரியாயம் மா ஆதலால், பரிக்காய் என்றது மாங்காயை.

பை - படம், இதுபடத்தை யுடைய பாம்புக்காயிற்று, பாம்பில் கத்தரி என்பது ஓர்வகைப்பாம்பு ஆதலால் அப்பைககாய் என்றது அந்தக் கத்தரிக காயை. இது இவாஅத்தைமகள் சமைத்தகறிவகைகளில் உப்பு அதிகரித்திருந்ததைக குறித்துப் பாடியது.

சீத்துப்பூத்தென்றுபாடியது.

**46.** அப்பூருஞ்செஞ்சடைமேலம்புலியைப்பார்த்துப்பார்த்
தெப்போதுஞ்சீத்துப்பூத்தென்னவே - முப்போதும்
வாலங்காட்டாநிற்கும்வாயங்காவாநிற்கும்
ஆலங்காட்டான்பூணரா.

இ - ள். ஆலங்காட்டான் - திருவாலங் காட்டையுடைய வனுகிய பரமசிவன், பூண் - (ஆபரணமாகத்) தரித்த, அரா - பாம்பானது, அப்பு ஊரும் - கங்கை தங்கிய, செஞ்சடைமேல் - செஞ்சடைமீதுள்ள, அம்புலியை - சந்திரனை, பார்த்து பார்த்து - நோக்கி நோக்கி, எப்போதும் - எப்பொழுதும், சீத்துப்பூத்து என்ன - சீத்துப்பூத்தென்று, முப்போதும் - மூன்று காலத்திலும், அந்தவால் ஆட்டாநிற்கும் - அவ்விடத்துத் தன்வாலையசையாநிற்கும், வாய் அங்காவாநிற்கும் - வாயைத்திறவாநிற்கும், எ - று.

ஒருவர், கடல்நடுவிற்செந்தூளெழும்பினதாகக் கற்பித்துப் பாடவேண்டுமெனப் பாடியது.

**47.** சுத்தபாற்கடலினடுவினிற்றூளிதோன்றியவதிசயமதுகேள்
மத்தகக்கரியையுரித்தவன்மீதுமதன்பொருதழிந்திடுமாற்றம
வித்தகக்கமலைசெவியுறக்கேட்டாள் விழுந்துநொந்தயாந்தழு
தோங்கிக், கைத்தலமலரான்மார்புறப்புடைத்தாளெழுந்தது
கலவையின்செந்தூள்.

இ - ள். சுத்தம் - பரிசுத்தமாகிய, பால்கடலின் நடுவினில் - [illegible] பாற்கடலினிடையே, தூளிதோன்றிய - செந்தூள் எழுந்த அதிசயமது கேள் - அதிசயத்தைக் கேட்பாய், மத்தகம் கரியை உரித்தவன்மீது - மஸ்தகத்தையுடைய யானையையுரித்தவனாகிய சிவபெருமான்மீது, மதன்பொருது - மன்மதன் போர்புரிந்து, அழிந்திடும் மாற்றம் - இறந்த செய்தியை, வித்தகம் கமலை - அறிவினையுடைய திருமகள், செவி உறகேட்டாள் - காதிற்பொருந்தக்கேட்டு, விழுந்து - கீழேவிழுந்து, நொந்து - மனம் நொந்து, அயர்ந்து அழுது - சோர்ந்தழுது, ஓங்கி - உயரத்தூக்கி, கைத்தல மலரால் - தாமரைமலர் போன்றகைகளால், மார்பு உறப்புடைத்தாள் - மார்பில படும்படி அறைந்து கொண்டாள், (அதனால்) கலவையின் செந்தூள் - (அந்தமார்பில் பூசப்பட்டிருந்த) கலவைச்சந்தனத்தின் செந்தூளானது, எழுந்தது - மேலெழுந்துபரந்தது, எ - று.

புத்திரசோகம் கொடிதாதலால் இலக்ஷ்மிபேரறிவையுடையளாயிருந்தும் இவ்வாறு சோகித்தாள் என்றதாயிற்று.

**என்னையிடுக்கடி, பாயைச்சுருட்டடி, ஏகடியம்பலத்தே என்றுபாடியது.**

48. தடக்கடலிற்பள்ளிகொள்வோமதனைநற்சங்கரனார்
அடற்புலிக்குட்டிக்களித்தனராமதுகேட்டுநெஞ்சில்
நடுக்கமவந்துற்றதுகைகாலெழாநளினத்தியென்னை
இடுக்கடிபாயைச்சுருட்டடியேகடியம்பலத்தே.

இ - ள். தடக்கடலில்-விசாலமாகிய இந்தக்கடலில், பள்ளிகொள்வோம - (இதுவரையில்) உறங்கினோம, (இப்போது) அதனை - இந்தக் கடலை, நலசங்கரனார் - நன்மையுள்ள சிவபெருமானவர், அடல் புலிக் குட்டிக்கு-வலியுள்ள புலிக்குட்டிக்கு, அளித்தனராம-கொடுத்தனராம், அது கேட்டு-அந்தச் செய்தியைக்கேட்டு, நெஞ்சில நடுக்கம் வந்து உற்றது-மனத்தில் நடுக்கம் வந்தடைந்தது, கைகால எழா - கை கால்கள எழாவாயின, (ஆதலால்) நளினத்தி-கமலாஸனையாகிய திருமகளே, என்னை இடுக்கடி-என்னைககக்கத்தில் இடுக்கிக்கொளளடி, பாயைச் சுருட்டடி - பாம்பணையைச் சுருட்டிக்கொளளடி, அம்பலத்து ஏகடி-அமபலத்திற்செல்லடி எ - று.

புலி - கௌதமர் புலிக்குட்டி - உபமந்யர்.

**போவான்வருவான் புகுவான் புறப்படுவான் ஆவான் இவன் அவனாம் என்று பாடியது.**

49. செற்றலரைவென்றதிருமலைராயன்கரத்தில
வெற்றிபுரியுமவாளேவீரவாள் - மற்றையவாள்
போவான்வருவான்புகுவான்புறப்படுவான்
ஆவானிவானவானாம.

இ - ள். செற்றலரைவென்ற - பகைவரைவென்ற, திருமலைராயன் கரத்தில - திருமலைராயனகையிலுள்ள, வெற்றிபுரியும்வாளே - வெற்றியைக்கொடுக்கிறவாளே, வீரவாள் - வீரவாளாகும் - மற்றையவாள்-மற்றைய வாட்கள, போவான் வருவான புகுவான் புறப்படுவான ஆவான இவான அவான், ஆம - ஆகும, எ - று.

திருமலைராயன்கையிலுள்ள வீரவாளேவாளாகும், மற்றையர்கையிலுள்ள வாட்களெல்லாம போவான வருவான முதலியவாகப் பரிகசித்தற் குரியனவேயா மென்பது கருத்து.

**பன்றிக்குமாரிபிலேகோம்புமுளைத்ததுஎன்றுபாடியது.**

50. தெருமுட்டப்பாளைசிதறவளர்பூகத
தருமுட்டச்செவ்வாளைதாவும - திருமுட்டத
தாரிலேகணடேனொருபுதுமைபன்றிக்கு
மாரிலேகொமபானவாறு.

இ - ள். தெருமுட்ட - தெருக்கள் முழுதும், பாளை சிதற - பாளைகள் சிதறும்படி, வளர்-வளர்ந்த, பூகத்தருமுட்ட-கமுகமரங்களைத் தோறும், செவ்வாளைதாவும்-செவ்வாளை மீன்கள் குதிக்கின்ற, திருமுட்டத்தூரிலே - திருமுட்டத்தூரில், ஒரு புதுமைகண்டேன்-ஒரு அற்புதத்தைக்கண்டேன், (என்னையெனின்) பன்றிக்குமாரிலேகொம்பு ஆனஆறு - பன்றிக்குமார்பில் கொம்புண்டாயிருக்கும் விதமேயாம், எ - று.

பன்றி - பூவராஹஸ்வாமி யென்னுந் திருமால். கொம்பு - அவரது திருமார்பிலுள்ள பூங்கொம்புபோல் பவளாகிய திருமகள்.

**அதிமதுரகவிராயன் உன்பெயரென்ன உனக்குப்பாடத்தெரியுமோ எனப்பாடியது.**

51. இம்மென்னுமுன்னேயெழுநூறுமெண்ணூறும
அம்மென்றாலாயிரம்பாட்டாகாதோ - சும்மா
இருந்தாலிருந்தேனெழுந்தேனேயாயின்
பெருங்காளமேகம்பிளாய்.

இ - ள். இம் என்னு முன்னே - இம்மென்றுவாய் திறத்தற்கு முன்பே, எழுநூறும் எண்ணூறும் - எழுநூறு எண்ணூறுபாடல்களும், அம் என்றால் - அம்மென்றுச்சரித்தால்,(அவ்வுச்சரிக்கிற காலத்துக்குள)ஆயிரம் பாட்டு - ஆயிரம் பாடல்களும், ஆகாதோ - முடிவுபெறாதோ, சும்மா இருந்தால் இருப்பேன்-(பாடுதற்குக் காரணமில்லாதபோது) சும்மா இருந்தால் இருப்பேன், எழுந்தேனே ஆயின் - (காரணமிருந்து) பாடுதற்கு மனவூக்கங்கொளவேணுமின், பெருந்தாரைமேகம்-பெரிய நீர்த்தாரைகளைச் சொரிகிற மேகம்போல்வேன் (என்று நினை), பிளாய் - பிள்ளாய், எ - று.

52. குரங்கனலில்வீழ்ந்துவெறிகொண்டுதேள்கொட்டக்
கரஞ்செறியப்பாமபலவன்கவ்வ - விளைநதுபேய்
பற்றவேகள்ளுண்டுபச்சைமிளகைக்கடித்தால
எத்தனைபாரசேட்டைக்கிடம.

இ - ள். குரங்கு - ஒரு குரங்கானது, அனலில் வீழ்ந்து-நெருப்பில் வீழ்ந்து, வெறிகொண்டு - பித்துப்பிடித்து, தேள்கொட்ட - தேள் கொட்டவும், பாமபு கரம் செறிய - பாம்புகையிற சுற்றிக்கொள்ளவும், அலவன் கவ்வ-நண்டு கவ்விக்கொள்ளவும், விளைநதுபேய்பற்ற-விளைவாகப் பேய்பிடிக்கவும, கள் உண்டு - கள்ளைக்குடித்து, பசசைமிளகைக்கடித்தால் - பசைமிளகையும் கடிக்குமாயின், சேட்டைக்கு இடம் எத்தனைபார் - (அதனது) சேஷ்டைகளுக்கு இடமாவன எத்தனை நீயேபார், எ - று.

**ஒருவர் சிவபெருமானைக்குறித்து, நீறவாய், நெருப்பாவாய், கூறவாய், கொளுந்துவாய், நட்டமாவாய், நஞ்சாவாய், என்றுஒருவெண்பாப் பாடவேண்டுமெனப் பாடியது.**

53 நீறவாய்நெற்றிநெருப்பாவாயங்கமிரு
கூறுவாய்மேனிகொளுந்துவாய் - மாறுத
நட்டமாவாய்சோறுநஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்க்காப்பாயினி.

இ - ள். நெற்றி நீறு ஆவாய் - நெற்றியில் திருநீறுடையையாவாய், அங்கம் நெருப்பு ஆவாய் - திருமேனி நெருப்பு மயமாவாய், மேனி இரு கூறு ஆவாய் - திருமேனி இருகூறுயிருப்பாய, கொளுந்துவாய்-எரிந்துகொண்டிருப்பாய் மாறுத நட்டமே ஆவாய் - இடையறுத நடனத்தையுடையையாவாய், நஞ்சுசோறு ஆவாய் - விஷத்தை உணவாகக் கொள்வோனுவாய், இனி - இனியாயினும், நாயேனை-நாயினேனை, இட்டமாய்க்காப்பாய்-அன்போடுகாத்தருள்வாய், எ - று,

வெளிக் கிவ்வாறிருப்பினும உள்ளிருக்கும கருணையால் என்னைக் காக்க வேண்டும என்பது கருத்து.

**கும்பகோணத்தில் ஒருசமாராதனையில் காளமேகம் உண்ணும்போது, இவருக்கெதிரிலிருந் துண்ணும் ஒருசோழியப்பிராமணன் குடுமி அவிழ்ந்து இலையில்விழுந்தது அவன் அதையெடுத்து உதறினன்,எச்சிற்சோறு காளமேகம் இலையில்விழச் சினந்துபாடியது.**

54 சுருக்கவிழ்ந்தமுன் குடுமிச்சோழியாசோற்றுப்
பொருக்குலர்ந்தவாயாபுலையா - திருக்குடந்தைக்
கோட்டானேநாயேகுரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப்போய்.

இ - ள். சுருக்கு அவிழ்ந்த - முடிச்சவிழ்ந்த, முன்குடுமிசோழியா-முன்குடுமியையுடைய சோழியனே, சோற்றுபொருக்கு உலர்ந்தவாயா - சோற்றுப்பருக்கை யுலாந்தொட்டியிருக்கிற வாயையுடையவனே, புலையா-நீசனே, திருக்குடந்தைக்கோட்டானே - திருக்குடந்தையிலுள்ள கோட்டானே, நாயே-சுநகமே, குரங்கே - வாநரமே, ஒருத்தி - ஒருமாது, வேலை அற்றுப்போய் - வேலையற்றவளாகி, உன்னை போட்டாளே - உன்னையும் ஒருபிள்ளையாக ஈன்றுளே (என்னபாவம) எ - று.

போட்டாள் என்றது பன்றி நாய்முதலியவை குட்டிபோடுதல்போல உன்னையும் போட்டாள் என்றிழித்துக் கூறியவாறு.

